தருமபுர ஆதீன வெளியீடு எண் 49.

# திருப்பாடல்கள்



கோவை கிழார் அவர்களால்

தொகுக்கப்பெற்று

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்

24-வது மகாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ ஷண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரியசுவாமிகள்
அவர்களின்

ஆக்ஞைப்படி வெளியிடப் பெற்றது.



1942.



திருக்கயிலாய பரம்பரைத் திருத் தருமபுர ஆதீனம்

24-வது மகாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ

குருபாதம்

# முன்னுரை

அறநிலைப் பாதுகாப்புச் சங்கத்தார் (Hindu Religious Endowments Board) இட்ட அறிக்கையின்படி ஆலயங்களில் கடவுள் வணக்கச் செய்யுட்களை ஆலய அதிகாரிகள் ஆலயமதில்களில் எழுதிவைக்கக் கடமைப் பட்டிருக்கிறார்கள். ஆனால் ஒரு சில ஆலய அதிகாரிகளே அவ்வறிக்கையைப் பின்பற்றிச் சில செய்யுட்களை எழுதி யிருப்பதாகத் தெரிகிறது. பெரும்பான்மையான பேர்கள் இதுகாறும் எழுதவில்லை எனத்தெரிகிறது. ஒரு சிலர் இன்னது எழுதுவது என்று தெரியாமலும் இருக்கிறார் களாம். இதனை உத்தேசித்துக் கோவை கிழார் அவர்கள் எடுத்துக்காட்டாகச் சில பாடல்களைத் திரட்டித்தந் துள்ளார்கள். ஆலய அதிகாரிகள் அதைப்பின்பற்றி ஆலயங்களில் எழுதினால் பொதுமக்களுக்கு மிகுந்தபயன் தரும். இது சமயத்தொடர்புடைய வெளியீடா யிருப்ப தாலும், இதனால் ஆலயங்களுக்கும் பொதுமக்களுக்கும் பயன் ஏற்படுமாகையாலும், இப்பணி இவ்வாதீன மடாலயத்தில் இதுபோதுநடாத்திவரும் தொண்டுகளுக்குப் பொருத்தமாய் அமைகிறபடியாலும், இதனை இவ்வாதீன வெளியீடாக வெளியிடுமாறு இவ்வாதீனத்தில் 24-வது குருமகாசந்நிதானமாய் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ ஷண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் உத்தரவிட்டிருக்கிறார்கள். இதனைச் சமய நிலையங்களும், பொதுமக்களும் பயன்படுத்திக் கொள்வார்களாக.

தருமபுரம்
1-10-'42.

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீன
ஒடுக்கம், சிவகுருநாதத்தம்பிரான்.

ஆலயங்களில் எழுதவேண்டிய

# திருப்பாடல்கள்



## I. சிவாலயங்கள்

I 1. பாடல்பெற்றவை:— சம்பந்தர், அப்பர், சுந்தரர் இவர்களால் தனிப் பதிகங்களாகப் பாடல் பெற்றவை. இவைகளுக்கு முழுத்தேவாரப் பதிகங்களுண்டு.

| | | | |
|---|---|---|---|
| சோழநாடு | சிதம்பரம் முதலிய | தலங்கள் | 190 |
| பாண்டிநாடு | மதுரை முதலிய | ,, | 14 |
| நடுநாடு | திருவண்ணுமலை முதலிய | ,, | 22 |
| தொண்டைநாடு | காஞ்சி முதலிய | ,, | 32 |
| கொங்குநாடு | அவிநாசி முதலிய | ,, | 7 |
| ஈழநாடு | திரிகோணமலை முதலிய | ,, | 2 |
| வடநாடு | ஸ்ரீ சைலம் முதலிய | ,, | 5 |
| மலைநாடு | திருவஞ்சைக்களம் என்ற தலம் | | 1 |
| துளுவநாடு | கோகர்ணம் ,, | | 1 |
| | | ஆக தலங்கள் | 274 |

2. வைப்புத்தலங்கள்:— மூவர்களாலும் பதிகங்களில் பெயர்மாத்திரம் குறிக்கப் பெற்றவைகள். மொத்தம் தலங்கள் 249.

3. திருவாசகம் திருவிசைப்பா முதலிய 5-திருமுறைகளில் கூறப்பெற்றவை.

4. தலபுராணங் கொண்டவை.

5. பிற புலவர்களால் பாடப்பெற்றவை.

1-5 வரை தலங்களில் அவைகளுக்கு ஏற்பட்டுள்ள துதிப்பாடல்களில் முக்கியமானவைகளை எழுதவேண்டும். இவை பெரும்பாலும் அச்சிடப்பட்டுள்ளன.

II. பாடல்பெறாதவை:— மேலே சொன்ன பாடல்கள் எதுவும் பெறாத மற்றைத் தலங்களுக்கு அடியிற்கண்ட பொதுப்பாடல்களை எழுதுக.

தோடுடையசெவியன் விடையேறி ஓர் தூவெண்மதிசூடி
காடுடைய சுடலைப்பொடிபூசி யென் உள்ளங்கவர் கள்வன்
ஏடுடைய மலரான் முனைநாள் பணிந்தேத்த அருள்செய்த
பீடுடைய பிரமாபுரமேவிய பெம்மான் இவனன்றே. —சம்பந்தர். 1.

கூற்றாயினவாறு விலக்ககிலீர் கொடுமைபல செய்தன நானறியேன்
ஏற்றாய் அடிக்கே இரவும் பகலும் பிரியாது வணங்குவன்
எப்பொழுதும்
தோற்றாது என்வயிற்றில் அகம்படியே குடரோடு துடக்கி
முடக்கியிட
ஆற்றேன் அடியேன் அதிகைக்கெடில வீரட்டானத்துறை
அம்மானே. —அப்பர். 2.

பித்தா பிறைசூடீ பெருமானே அருளாளா
எத்தான் மறவாதே நினைக்கின்றேன் மனத்து உன்னை [டுறையுள்
வைத்தாய் பெண்ணைத் தென்பால் வெண்ணெய்நல்லூர் அருட்-
அத்தா உனக்காளாய் இனி அல்லேன் என்லாமே —சுந்தரர். 3.

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார்தமை நன்னெறிக்கு உய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப்பொருளாவது
நாதன் நாமம் நமச்சிவாயவே. —சம்பந்தர். 4.

நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும் எம்பிரானுடைய கோயில்புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்குமிட்டுப்
பூமாலைபுனைந்து ஏத்திப் புகழ்ந்துபாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடிச்
சங்கரா சயபோற்றி போற்றியென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதீஎன்றும்
ஆரூரா என்றென்றே அலறுநில்லே. —அப்பர். 5.

அந்தணாளன் உன் அடைக்கலம் புகுத
அவனைக் காப்பது காரணமாக
வந்த காலன்தன் ஆருயிரதனை
வவ்வினுய்க்கு உன்தன் வண்மைகண்டு அடியேன்
எந்தை நீ எனை நமன்தமர் நலியில்
இவன்மற்று என்னடியானென விலக்கும்
சிந்தையால் வந்து உன்திருவடி அடைந்தேன்
செழும்பொழில் திருப்புன்கூருளானே. —சுந்தரர். 6.

பால்நினைந்து ஊட்டும் தாயினும சாலப்
பரிந்து நீ பாவியேனுடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்தமாய
தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த
செல்வமே சிவபெருமானே
யான் உனைத்தொடர்ந்து சிக்கெனப்பிடித்தேன்
எங்கெழுந்தருளுவது இனியே. —மணிவாசகர். 7.

உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத்து ஆடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம். —சேக்கிழார். 8.

## II. பிள்ளையார் ஆலயங்கள்

பிள்ளையார் ஆலயங்களில் அடியிற்கண்ட துதிகளை எழுதுக.

பிடியதன் உரு உமைகொள மிகுகரியது
வடிகொடு தனதடி வழிபடுமவர் இடர்
கடிகணபதி வர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில் வலிவலம் உறை இறையே. —சம்பந்தர். 1.

திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும் செஞ்சொல்
பெருவாக்கும் பீடும் பெருக்கும் — உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்
காதலால் கூப்புவர் தம்கை. —பதினொராந் திருமுறை. 2.

விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்
விநாயகனே வேட்கை தணிவிப்பான் — விநாயகனே
விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாந் தன்மையினால்
கண்ணில் பணிமின் கனிந்து. ,, 3.

எடுக்கு மாக்கதை இன்தமிழ்ச் செய்யுளாய்
நடக்கு மேன்மை நமக்கு அருள்செய்திடத்
தடக்கை ஐந்துடைத் தாழ்செவி நீண்முடிக்
கடக்களிற்றைக் கருத்துள் இருத்துவாம். —சேக்கிழார். 4.

திருவும் கல்வியும் சீரும் தழைக்கவும்
கருணை பூக்கவும் தீமையைக் காய்க்கவும்
பருவமாய் நமது உள்ளம் பழுக்கவும்
பெருகும் ஆழத்துப் பிள்ளையைப் பேணுவாம்.

—விருத்தாசலபுராணம். 5.

## III சுப்பிரமணிய தலங்கள்

தனிச் சுப்பிரமணிய தலங்களுக்கு உரியவை.

1. திருப்புகழ் பெற்றவை:— அருணகிரிநாத சுவாமிகள் அருளிச்செய்த தலத்திருப்புகழ்களை எழுதுக.

2. புராணங்கள் உள்ளவை:— அப்புராணங்களிற் கண்ட முருகன் துதிகளை எழுதுக.

3. ஏனையவை:— அடியிற்கண்டவைகளை எழுதுக.

முன்னையார் மயில் ஊர்தி முருகவேள்
தன்னை யாரெனில் தான் ஓர் தலைமகன்
என்னை ஆளும் இறையவன் எம்பிரான்
பின்னை யாரவர் பேரெயிலாளரே. —அப்பர். 1.

உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னை ஒருவரை யான் பின்செல்லேன் — பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்திவாழ்வே. —பதினோராந்திருமுறை. 2.

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே. —கந்தானுபூதி. 3.

முடியாப் பிறவிக்கடலில் புகார் முழுதுங்கெடுக்கும்
மிடியால்படியில் விதனப்படார் வெற்றிவேற்பெருமாள்
அடியார்க்கு நல்லபெருமாள் அவுணர் குலமடங்கப்
பொடியாக்கிய பெருமாள் திருநாமம் புகல்பவரே.
—கந்தரலங்காரம். 4.

ஏறுமயிலேறி விளையாடும் முகம் ஒன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுகம் ஒன்றே
கூறும் அடியார்கள் வினைதீர்க்கும் முகம் ஒன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுகம் ஒன்றே
மாறுபடு சூரரை வதைத்தமுகம் ஒன்றே
வள்ளியை மணம்புணர வந்தமுகம் ஒன்றே
ஆறுமுகமான பொருள் நீயருளல் வேண்டும்
ஆதியருணாசலம் அமர்ந்த பெருமாளே.
—அருணகிரிநாதர். 5.

அருவும் ஆகுவன் உருவமும் ஆகுவன் அருவும்
உருவும் இல்லதோர் தன்மையும் ஆகுவன் ஊழின்
கருமம் ஆகுவன் நிமித்தமும் ஆகுவன் கண்டாய்
பரமன் ஆடலை யாவரே பகர்ந்திடற்பாலார். —கந்தபுராணம். 6.

## IV. அம்மன் கோயில்கள்

அடியிற்கண்ட துதிகளை எழுதுக.

சுந்தரி எந்தை துணைவி என் பாசத்தொடரை எல்லாம்
வந்து அரி சிந்துரவண்ணத்தினள் மகிடன் தலைமேல்

அந்தரி நீலி அழியாத கன்னிகை ஆரணத்தோன்
கந்தரி கைத்தலத்தாள் மலர்த்தாள் என் கருத்தனவே.
—அபிராமியந்தாதி. 1.

பூத்தவளே புவனம் பதினான்கையும் பூத்தவண்ணம்
காத்தவளே பின் கரந்தவளே கறைக்கண்டனுக்கு
மூத்தவளே என்றும் மூவா முகுந்தற்கு இளையவளே
மாத்தவளே உன்னையன்றி மற்றோர் தெய்வம் வந்திப்பதே. ,, 2.

தனம்தரும் கல்விதரும் ஒருநாளும் தளர்வுஅறியா
மனம்தரும் தெய்வவடிவும் தரும் நெஞ்சில் வஞ்சமில்லா
இனம்தரும் நல்லனஎல்லாம் தரும் அன்பர் என்பவர்க்கே
கனம்தரும் பூங்குழலாள் அபிராமி கடைக்கண்களே. ,, 3.

தூக்கும் பனுவல் துறைதோய்ந்த கல்வியும் சொற்சுவைதோய்
வாக்கும் பெருகப் பணித்தருள்வாய் வடநூற்கடலும்
தேக்கும் செழுந்தமிழ்ச்செல்வமும் தொண்டர் செந்நாவில் நின்று
காக்கும் கருணைக்கடலே சகலகலாவல்லியே. —குமரகுருபரர். 4.

செங்கமலப் பொலந்தாதில் திகழ்ந்து ஒளிரும்
எழில்மேனித் திருவே வேலை
அங்கணுலகு இருள்துறக்கும் அலர்கதிராய்
வெண்மதியாய் அமரர்க்கு ஊட்டும்
பொங்கழலாய் உலகு அளிக்கும் பூங்கொடியே
நெடுங்கானில் பொருப்பில் மண்ணில்
எங்குளை நீ அவணன்றோ மல்லல் வளம்
சிறந்தோங்கி இருப்பதம்மா. —காசிகாண்டம். 5.

## V. கிராம தேவதைகள்

ஐயனார் பிடாரி முதலியன. தனிப்பாடல்கள் இருந்தால் எழுதுக. இல்லாவிடில் சிவாலயங்கட்குக் குறித்த பாடல்களையே எழுதுக.

## VI. திருமால் ஆலயங்கள்

I. 1. மங்களாசாசனம் பெற்றவை 108. ஆழ்வார்கள் பன்னிருவர்களால் பாடப்பெற்றவை.

2. ஆசாரியர்களால் பாடப்பெற்றவை.

3. வைணவப்புலவர்களால் துதிக்கப் பெற்றவை.

4. தலபுராணங்கள் உள்ளவை.

1. முதல் 4-வரை தலங்களுக்கு அந்தந்தப் பாசுரங்களை எழுதுக.

II. பாடல் பெறாதவை:- அடியிற்கண்டவைகளை எழுதுக.

குலந்தரும் செல்வம் தந்திடும் அடியார்
படுதுயர் ஆயின எல்லாம்
நிலந்தரம் செய்யும் நீள்விசும்பு அருளும்
அருளொடு பெருநிலம் அளிக்கும்
வலந்தரும் மற்றும் தந்திடும் பெற்ற
தாயினும் ஆயின செய்யும்
நலந்தரும் சொல்லை நான் கண்டுகொண்டேன்
நாராயணா என்னும் நாமம். —திருமங்கையாழ்வார். 1.

பச்சைமா மலைபோல் மேனி பவளவாய்க் கமலச் செங்கண்
அச்சுதா அமரர் ஏறே ஆயர்தங்கொழுந்தே என்னும்
இச்சுவைதவிர யான்போய் இந்திரலோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமாநகருளானே.
—தொண்டரடிப்பொடியாழ்வார். 2.

ஆனாத செல்வத்து அரம்பையர்கள் தற்சூழ
வானாளுஞ் செல்வமும் மண்ணரசும் யான் வேண்டேன்
தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடச் சுனையில்
மீனாய்ப் பிறக்கும் விதியுடையேன் ஆவேனே.
—குலசேகரப்பெருமாள். 3.

யாவையும் யாவரும் தானாய் அவரவர் சமயந்தோறும்
தோய்விலன் புலன் ஐந்துக்கும் சொலப்படான் உணர்வின்மூர்த்தி
ஆவிசேர் உயிரினுள்ளான் யாதுமோர் பற்றிலாத
பாவனை அதனைக் கூடில் அவனையுங் கூடலாமே.
—நம்மாழ்வார். 4.

இம்மைக்கும் ஏழேழ் பிறவிக்கும் பற்றாவான்
நம்மை யுடையவன் நாராயணன் நம்பி
செம்மையுடைய திருக்கையால் தாள்பற்றி
அம்மி மிதிக்கக் கனாக்கண்டேன் தோழீ நான். —ஆண்டாள். 5.



உ

குருபாதம்

# " ஞானசம்பந்தம் "

## திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்தினின்றும் வெளிவரும் சைவசித்தாந்த மாத வெளியீடு

**நீங்களும் ஒரு சந்தாதாரரா ?**

இல்லையேல் இப்பொழுதே சந்தாத்தொகையை செலுத்தி பத்திரிகையைப் பெற்றுக்கொள்ளுங்கள்.

மாதம் ஒரு முறையாவது அன்பர்கள் பலருக்கும் நம் சமயக் கொள்கைகளை எடுத்து விளக்கிக் கூற வேண்டும் என்ற பெருவிருப்பால் சென்ற ஒரு வருட காலமாக வெளிவருகிறது. சைவ உலகிலுள்ள நல்ல தெளிந்த அறிவாளிகள் சைவத் திருமுறைகள், சாத்திரங்களிலிருந்து தெளிந்த அரும் பெரும் விஷயங்களை எழுதி வருகிறார்கள். ஒவ்வொரு சைவ நன் மக்களின் வீடுகளிலும், புத்தகசாலைகளிலும், ஆலயங்களிலும் அவசியம் இருக்கவேண்டியதொன்று என்று அறிஞர்களால் போற்றப்படுவது. எல்லோருக்கும் பயன் அளிக்க வேண்டுமென்றே காகிதம் கிடைப்பது அரிதாக உள்ள இக்காலத்திலும் ஆண்டு வரியை மிகக்குறைவாக அடியிற்கண்டபடி வைக்கப்பட்டிருக்கிறது.

| | |
|---|---|
| உள்நாடு (இந்தியா, இலங்கை) அஞ்சற்கூலியுட்பட | ரூ. 1—8—0 |
| தனிப்படி (அஞ்சற்கூலி வேறாக) விலை ... | ரூ. 0—2—0 |

இதற்கென இப்பொழுது வசதியுள்ள அச்சுக்கூடம் ஒன்றும் பெருஞ் செலவில் நிறுவப்பட்டிருக்கிறது. அதில் நல்ல தேர்ந்த வேலைக்காரர்களைக்கொண்டு அழகான முறையில் புத்தகங்கள் பதிப்பிக்கவும், பத்திரிகைகள் முதலியன போடவும் ஏற்பாடாகி இருக்கிறது. இதனையும் அன்பர்கள் பயன்படுத்திக்கொள்வார்களாக.

செயலாளர்,
" ஞானசம்பந்தம் " காரியாலயம்,
தருமபுரம், மாயவரம்.

உ

குருபாதம்

# “ ஞானசம்பந்தம் ”

## திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்தினின்றும் வெளிவரும் சைவசித்தாந்த மாத வெளியீடு

**நீங்களும் ஒரு சந்தாதாரரா ?**

இல்லையேல் இப்பொழுதே சந்தாத்தொகையை செலுத்தி பத்திரிகையைப் பெற்றுக்கொள்ளுங்கள்.

மாதம் ஒரு முறையாவது அன்பர்கள் பலருக்கும் நம் சமயக் கொள்கைகளை எடுத்து விளக்கிக் கூற வேண்டும் என்ற பெருவிருப்பால் சென்ற ஒரு வருட காலமாக வெளிவருகிறது. சைவ உலகிலுள்ள நல்ல தெளிந்த அறிவாளிகள் சைவத் திருமுறைகள், சாத்திரங்களிலிருந்து தெளிந்த அரும் பெரும் விஷயங்களை எழுதி வருகிறார்கள். ஒவ்வொரு சைவ நன் மக்களின் வீடுகளிலும், புத்தகசாலைகளிலும், ஆலயங்களிலும் அவசியம் இருக்கவேண்டியதொன்று என்று அறிஞர்களால் போற்றப்படுவது: எல்லோருக்கும் பயன் அளிக்க வேண்டுமென்றே காகிதம் கிடைப்பது அரிதாக உள்ள இக்காலத்திலும் ஆண்டு வரியை மிகக்குறைவாக அடியிற்கண்டபடி வைக்கப்பட்டிருக்கிறது.

| | |
|---|---|
| உள்நாடு ( இந்தியா, இலங்கை ) அஞ்சற்கூலியுட்பட | ரூ. 1—8—0 |
| தனிப்படி ( அஞ்சற்கூலி வேறாக ) விலை ... | ரூ. 0—2—0 |

இதற்கென இப்பொழுது வசதியுள்ள அச்சுக்கூடம் ஒன்றும் பெருஞ் செலவில் நிறுவப்பட்டிருக்கிறது. அதில் நல்ல தேர்ந்த வேலைக்காரர்களைக்கொண்டு அழகான முறையில் புத்தகங்கள் பதிப்பிக்கவும், பத்திரிகைகள் முதலியன போடவும் ஏற்பாடாகி இருக்கிறது. இதனையும் அன்பர்கள் பயன்படுத்திக்கொள்வார்களாக.

செயலாளர்,
“ ஞானசம்பந்தம் ” காரியாலயம்,
தருமபுரம், மாயவரம்.